# தெய்வீக வாக்கு



"தந்தை தாயாவானும் சார்கதியிங் காவானும்
...காவானும் - எந்தமுயிர்
...வானும் அருட்
..."



76வது சிவானந்த ஜயந்தி (8-9-62) இலவச வெளியீடு

# தெய்வீக வாக்கு

## 76வது

## சிவானந்த ஜயந்தி (8-9-62) மலர்

## பொருளடக்கம்



### பிரார்த்தனை

பகவான் சிவானந்தர் எம்முடன் ஒன்றுயிருப்பதுபோல் யாமும் அவருடன் ஒன்றுயிருக்கும் வண்ணம், பிறப்பும் பிறப்பின்மைக்கும், இறப்பும் இறப்பின்மைக்கும் அப்பாலுள்ள அதற்குள்-நிரதிசய நித்தியப் பொருளுக்குள்-யாம் நுழையும் வண்ணம், அவரது பிறந்த தினத்தை எம் அகந்தையின் விஷமின்றி யாம் கொண்டாடும் வண்ணம் அவர் எம் இதயங்களிற் பிறப்பெடுப்பாராக!

(சைதன்யம்)

# சாதன பஞ்சகம்

(ஸ்ரீ சங்கரர்)



1. தினமும் வேதம் ஓதுக. அங்கு விதிக்கப்பட்ட கர்மங்களை முறையாகச் செய்க. கர்ம பலன்களை ஈஸ்வரார்ப்பணமாக நிவேதித்துக் கர்மானுஷ்டான மூலம் ஈஸ்வரனை வழிபடுக. சகாம கர்மங்களிலுள்ள ஆசையை நீக்குக. பாபகர்மங்களிலிருந்து விலகுக. இச் சம்சாரத்தில் புலனுகர்ச்சி இன்பத்தின் தோஷங்களைப் பற்றிச் சிந்திக்குக. ஆத்மானுபூதி பெறும் இச்சையில் உறுதி கொள்க. உடனே வீட்டை விட்டு வெளியேகுக.

2. சாது சங்க சகவாசம் சம்பாதிக்குக. இறைவன்பால் திடசித்தமுள்ள பற்றுறுதி விருத்தியாக்குக. சாந்தம் முதலியன போன்ற அறங்களை உறுதியுடன் அனுசிலனஞ் செய்க. உடனடியாகச் சகாம கர்மங்களை அகற்றுக. உத்தம ஆசிரியரிடம் செல்க. தினமும் அவர் கமல பாதங்களைச் சேவிக்குக. பிரம்மன் ஆகிய ஓரசையின் அறிவைப் பெறுவதற்கு முயல்க. உபநிடதங்களின் (வேதாந்த) உத்தம வசனங்களை (மகா வாக்கியங்களை) உற்றுக் கேட்குக.

3. மகா வாக்கியங்களின் அல்லது உத்தம வசனங்களின் உட்கருத்துகளை ஆராய்குக. வேதாந்தத்திடம் தஞ்சம் புகுக. அனுவசியமானதும் வீணானதுமான வாதங்களிலிருந்து உன்னையே காப்பாற்றுக. சுருதிகளுடன் கருத்தொற்றுமையான தர்க்கங்களின் உதவியுடன் விசாரணை செய்க. இராப் பகலாய் 'நான் பிரம்மன்' போன்றவற்றை ஆராய்குக. அகந்தையை நீக்குக. தேகத்தை ஆத்மாவாய்க்கருதுவதை(அகம் புத்தியை)நீக்குக. ஆன்மீக ஆசிரியர்களுடன் அனுவசியமாய் வாதிடாது விடுக.

4. பசியாகிய நோய்க்கு வைத்தியஞ் செய்க; உணவை (பிச்சையை) மருந்து போல் உண்க. ருசிகரமான உணவை ஒருகாலும் கேட்காது விடுக. கிடைப் பவற்றுடன் மனத் திருப்தி கொள்க. சீதோஷ்ணங்களைச் சகிக்குக. பயனற்ற பேச்சுக் களை ஒழிக. உதாசீனமாயிருக்கப் பயில்க. உலக மக்களிடம் (அவர்களிடமிருந்தும்) கொடூரத்தை ஒழிக.

5. ஏகாந்தத்தில் சுகமாய் நிலை கொள்க. தலை சிறந்த ஆன்மாவில் மனதை நிலைப் படுத்துக. சர்வ பூரண பிரம்மனை அனுபவத்தால் அறிக. அதில் உலகு மறுக்கப் பட்டதாய் நோக்குக. ஞானத் தின் வலுவாய் சஞ்சித கர்மத்தை ஆன்மாவில் ஒடுக்குக. ஆகாமிய கர்மங்களுடன் ஒரு தொடர் பும் கொள்ளாது விடுக. பிராரத்துவத்தை இவ் வாழ்விற் புசிக்குக. பிராரப்தத்தின் புசிப்பு முடி வடைந்ததும் பிரம்மனில் நிலை கொள்க.

6. இவ் வைந்து சுலோகங்களையும் தினமும் படிப் பவர்களிடமும் அவற்றின் உட்கருத்தை அமைதி யான மனதுடன் ஆராய்கிறவர்களிடமும் சம்சார மாகிய எரியும் நெருப்பும் முத்தாபங்களும் பிரம் மனின் அருளால் ஒழிகின்றன.



## நீ ஆன்மாவே

(சுவாமி சிவானந்தர்)

உன்னுள் ஓர் ஆன்மா உண்டு, ஓ ராமா,
ஆத்மா அல்லது பிரம்மம் அல்லது சைதன்யம்,

உடல் உள்ளத்தின் ஆதாரம்
அனந்தானந்தமும் அறிவுமாகிய ஆன்மா.
உன்னுள் ஒரு புருஷன் உண்டு, ஓ ராமா,
அது சத்துச் சித்து ஆனந்தம்,
இவ்வுலகிற்கும் வேதங்களுக்கும் பிறப்பிடம்
நித்திய அமைதியும் தூய்மையுமாகிய ஆன்மா.
உன்னுள் ஒளிகளுக்கொளி உண்டு, ஓ ராமா,
நித்தியம், தனிமுதல், அனந்தம்,
அனைத்துக்கும் அடிப்படை,
இசைவு, நிறைவாகிய 'ஆன்மாதீதம்'.
உன்னுள் ஓர் அழிவின்றிய சத்துண்டு, ஓ ராமா,
உயிர், ஒளி, அன்பாகிய உள்பொருள்,
இந் நாமரூபங்களின் பின்னணி.
அழகுந் தன்னொளியுமாகிய தலைசிறந்த ஆன்மா.
உன்னுள் உள்ளாள்வோன் உண்டு, ஓ ராமா,
ஒன்றானவர், சர்வவியாபகமானவர், அபின்னமான (வர்
இவ்வுலகின் முக்கிய ஆதாரம்,
பேரொளியும் மேன்மையுமாகிய ஆன்மாக்களின் (ஆன்மா.
உன்னுள் மறைவான ராச்சியாதிபர் உண்டு, ஓ ராமா
உன் எண்ணங்களின் இரகசிய சாட்சி,
விவரிக்கமுடியாத பேரொளியின் பரம் பிரகாசம்,
அமைதியும் அடக்கமுமாகிய அழிவின்றிய ஆன்மா.
'நேதி, நேதி' யென்று சுருதிகள் அழுத்தி அறை (கின்றன
நீ இவ்வுடல் உளமன்று.
நீ செயலின்றியவன், நிர்விகாரி,
நீ ஆத்மாவே, 'தத்துவம் அஸி' ஓ ராமா.
ஓம், சோகம், அல்லது சிவோகம் என்பதைத் (தியானி
உடல், உளம், பிராணன், புலன்களை மறு,
என்றுந்தூயபிரகாசமானபிரம்மம்நானேஎன்றுணர்
நீ இவ்வாத்மா வென்றறிந்து பந்தமற்றிரு, ஓ ராமா.

# ஆன்மா கடவுளே

(ஶ்ரீ சுவாமி ராமதாசர்)

உண்மை எங்கும் வியாபிக்கிறது. அதுவே என் அன்புக்குரியது. உயிர்ச் சக்தி எல்லாப் பிராணிகளையும் பொருட்களையும் உயிர்ப்பூட்டுகிறது; அதுவே என் அன்புக்குரியது. இடையறுத மகிழ்ச்சி எல்லா விடயங்களின் இருதயங்களில் துடிக்கிறது; அதுவே என் அன்புக்குரியது. ஒளி முழு உலகையும் விளக்குகிறது; அதுவே என் அன்புக்குரியது. நித்திய அமைதி, தெரிகிற, கிரகிக்கப்பட்ட யாதையும் தெரிவித்து உயிர்ப்பிக்கிறது; அதுவே என் அன்புக்குரியது. ஓ! என்றும் உள்ள உண்மையே! நான் எப்படி உன்னை நேரே கண்டு வர்ணிப்பேன்.

நான் என் மௌனத்தினதும் என் பேச்சினதும் சாட்சியே. நான் மௌனமே; நான் பேச்சே. என்ன ஆச்சரியம்! இது மறை மெய்மை சார்ந்த அனுபவம் என்று நான் சொல்ல முடியுமோ? அது இறையனுபவ வாதத்திலும் கூடிய ஆழமானதும் பலவற்றை யுட்கொண்டதுமாய் இருக்கிறது. அப்படியாயின் அது என்னை? அது விவரிக்க முடியாத இரகசியம்.

கடவுளும் ஆன்மாவும்: கடவுள் ஆன்மாவே, ஆன்மா கடவுளே. ஆன்மாவின் ஆடைகள் – எல்லா உடம்புகளும்உருவங்களும் கடவுளே, மூலாதாரமாய் ஒன்றே. அசைவில் சித்தே சக்தி. இறுகிய சக்தியே சடம்.

உள்வெளி இருப்பென்றில்லை. தெய்வீக

இருப்பே எல்லாவற்றிலும் எல்லாம் .எல்லாக்காட்சிகளிலும் கருத்துக்களிலும் அது மாத்திரமே உள்ளது. அது, அவள் அல்லது அவன் — எல்லாம் என் அன்புக்குரியது — உண்மையே, கடவுளே. கடவுள் உருவுடையவருமே, உருவற்றவருமே. நான் அவரை அறிய முயன்று அவராகினேன். நான் அவரே - இந்த அனுபவத்தில் என் ஒவ்வொரு எண்ணமும், உணர்ச்சியும் தெய்வீக ஊக்கம் பெறுகின்றது.

உயிர் பரந்த வெளியே. உயிர் காலமே. உயிர் காரண மின்றிய காரணமே. வெளி அனந்தம். காலம் நித்தியம். கடவுள் அனந்தமும் நித்தியமுமாகிய உயிரே. வெளி எல்லாப் பொருட்களையும் உட்கொண்டிருக்கிறது. நான் அப்படிப்பட்ட கடவுளே. அப்படிப்பட்ட உயிரே-காலமே—காரணமின்றியவனே. இது இட்டபடி நடக்கும் கற்பனையே. அது, நான் யாதாய் இருக்கிறேன்? கடவுள் யாதாய் இருக்கிறுர்? என்பதைக் கண்டு பிடிப்பதற்கு வேகங் கொண்ட முயற்சியே.

நான் பேசும்பொழுது நான் பேசாதிருக்கிறேன். நான் நடக்கும் பொழுது நான் அசைவில்லாதிருக்கிறேன். நான் வேலை செய்யும் பொழுது நான் ஓய்ந்திருக்கிறேன். நான் உலகங்களை அசைக்கும் பொழுது நான் ஒன்றும் செய்வதில்லை. நான் அசையாத உண்மையாய் இருக்கையில் எல்லா இயக்கங்களும் என்னுடையவே. உண்மையாக நான் இருக்கிறேன், நான் இருக்கவில்லை. நான் இதை என் கடவுளுக்குப் பொருத்தலாமோ? நான் அவரே; நான் வேறொருவரும் அன்று.

இருப்பே கடவுள். இன்மையே கடவுள். ஞாபகமும் அவரே. மறதியும் அவரே. நானும்

அவரே. நீயும் அவரே. நான் அவரைப் பார்க்கும் பொழுது நான் என்னையே பார்க்கிறேன். நான் எனக்கு முன்னுல் தோற்றும் பொழுது அவரின் காட்சி எனக்குக் கிடைக்கிறது. நாங்கள் எப்படிக் கலந்திருக்கிறோம். அவரும் நானும்! நானும் அவரும் ஒன்று என்று ஏன் நிச்சயிக்கக் கூடாது.

சத்தியமாம் பரப்பிரம சொரூபமே நான்
சலன மிலாப் பரப்பிரம சொரூபமே நா
வித்தியமாம் பரப்பிரம சொரூபமே நா
விரஞ் சனமாம் பரப்பிரம சொரூபமே நான்
சுத்தமதாம் பரப்பிரம சொரூபமே நான்
சுக கனமாம் பரப்பிரம சொரூபமே நா
னத்துவித பரப்பிரம சொரூபமே நானென்
றழுத் தமுட னநவரதஞ் சிந்தை செய்வாய்.

- ரிபுகீதை.

# வேதாந்தம்

1. வேதாந்தம் மெய்ப்பொருளை உணர்த்தும் தத்துவ நூலாகும்.

2. எப்பொருளை அறிந்தால் ஏனைய பொருள்கள் யாவையும் அறிந்ததாகுமோ அப்பொருளை உணர்த்தும் நூலே வேதாந்தமாகும்.

3. 'பிரஹ்மம் ஒன்றே மெய்ப் பொருள், நாம சொரூபமாய் இருக்கின்ற பிரபஞ்சம் முழுதும் பொய்த் தோற்றமே' — இதுதான் வேதாந்தத்

தின் உட்கருத்து. இது மேலும் கூறுவதாவது:— ஜீவன் பிரஹ்மனே அன்றி வேறல்லன்: பிரஹ்மம் இரண்டற்ற ஏக வஸ்து. அதனது சொரூபம் சத் -சித்-ஆனந்தம்; ஆதலின் ஜீவனும் அழிவற்றவன், பரிபூரணன், ஆனந்தமயன், முக்தன்.

4. ஜீவாத்மா உண்மையில் பரமாத்மாவேதான். அவித்தையின் வலிமையினுல் ஜீவாத்மா தன்னைக் கட்டுண்டவனுகக் கருதிக் கொள்கிருன். அவித்தை நீங்கினுல் ஜீவாத்மா - பரமாத்மா ஐக்கியமே.

5. வேதாந்தத்தின் நோக்கம் ஜீவனுக்கு அவனுடைய நிச சொரூபத்தை உணர்த்தி அவன் வாழ்க்கைப் பிணைப்பிலிருந்து விடுவித்தலேயாகும்.

6. வேதாந்தம் பரந்த நோக்கையும் விரிந்த மனப்பான்மையையும் தந்து இவ் வாழ்க்கையிலேயே விடுதலைக்கும் வழி காட்டுகின்றது.

7. வேதாந்தத்தின் அடிப்படைகளைக் கிரகிக்க தீவிர - இடைவிடாத முயற்சியும், சூட்சுமமான- கூர்மையான - பரிசுத்த புத்தியும் தேவை.

8. வேதாந்தம் பரோக்ஷ ஞானத்தில் ஆரம்பித்து அபரோக்ஷ ஞானத்தில் முடிவடைகின்றது.

9. உனது நிச சொரூபம் சத் - சித் — ஆனந்தமே. இதைத்தான் வேதங்களும் சுருதிகளும் ஒன்றுபோல் வற்புறுத்துகின்றன.

10. நீ அம்சன் அல்லன்; பூரணனே.

11. உண்மையில் நீயே அம் மெய்ப்பொருள்;

அம் மெய்ப் பொருளே நீ. இதைச் சுவானுபூதியில் உணர்ந்து விடுதலையடைவாயாக.

12. வேதாந்தம் எல்லா மதங்களையும் ஏற்றுக் கொள்கிறது.

13. வேதாந்தம் மனிதனுடைய பீதி - துக்கம்- மோகம் - கவலை ஆகியவற்றை நீக்கி அவனுக்குச் சக்தியையும் சாந்தியையும் தருகின்றது. மனிதரிடையே வேற்றுமைகளை நீக்கி ஒற்றுமையை வளர்க்கிறது.

14. பிறப்பு இறப்புக்களை ஒழிக்க வேதாந்தமே மேலாம் ஔடதம்.

15. மெய்ப் பொருளில் தீவிர நாட்டம், சதா ஆத்மனைப் பற்றிய நினைவு, தன்னடக்கம், பணிவு, கபடமின்மை, பொறுமை, சுருதிகளிலும் குருவாக்கியங்களிலும் தன்னிலும் பூரண விசுவாசம் முதலியன வேதாந்த சாதகனின் அடிப்படையான யோக்கியதாம்சங்களாகும்.

16. வேதாந்த சாதகனுக்குத் தேர்ச்சியும் சாதன சதுட்டயங்களும் இன்றியமையாதசாதனங்களாம்.

17. ஜீவபோதத்தைக் களைந்துவிடுவதே அத்வைத வேதாந்தத்தின் குறிக்கோள். ஜீவபோதம் அகன்றால் எஞ்சியது பரபோதமே.

18. சரீர அபிமானங்களையும், குடும்பப் பற்றுதல்களையும், உலக ஆசைகளையும் - தொடர்புகளையும் கீர்த்தி — கௌரவம் ஆகியவைகளையும் துற. இதனைத்தான் வேதாந்தம் வற்புறுத்துகின்றது.



# வேதாந்தியின் சிந்தனை

(சிவானந்தர்)

1, என்னில் இவ்வுலகம் தன்தோற்றத்தை வைத்திருக்கிறது,
என்னில் மாத்திரம்முழுவதும் நிலைத்திருக்கிறது,
என்னில் அது ஒடுங்கிறது,
காலாதீதமான இப்பிரம்மம் நான் தானே.
சிவோகம்! சிவோகம்! சிவோகம்! சிவோகம்!

2. என்னில் பிரம்மா விஷ்ணு சிவன் இருக்கின்றனர்.
என்னில் சூரிய சந்திரரும் நட்சத்திரங்களும் சுழல்கின்றன,
என்னில் மாத்திரம் புனிதகங்கையும் யமுனையும் பெருகுகின்றன,
தேசாதீதமான பிரம்மம் நான் தானே.
சிவோகம்! சிவோகம்! சிவோகம்! சிவோகம்!

3. என்னில் வேதமும் வேதாந்தமும் உற்பத்தியை வைத்திருக்கின்றன,
என்னில் எல்லாச் சித்திகளும் ரித்திகளும் உருளுகின்றன,
என்னில் மாத்திரம் ரிஷிகளும் யோகிகளும் இரண்டறக்கலக்கின்றனர்,
சுயம்புவான இப்பிரம்மம் நான் தானே.
சிவோகம்! சிவோகம்! சிவோகம்! சிவோகம்!

## பதினெண் 'மை' கள்

களங்கமற்ற தன்மை, ஒழுங்கு முறைமை, பகட்டின்மை, நேர்மை, எளிமை, உண்மை.

சமநிலைமை, நிலையானதன்மை, முற்கோபமின்மை, அமையுந்தன்மை, தாழ்மை, உறுதித்தன்மை.

முழுமை, பிரபுத் தன்மை, பெருந்தகைமை, கொடைத்திறமை, வள்ளன்மை, தூய்மை.

தினமும் அப்பியசியுங்கள் இப்பதினெண்மைகளை, விரைவில் அடைவீர்கள் அழிவின்மை.

பிரம்மன் மட்டும் உண்மையான பொருண்மை, திரு இன்னுர் என்பது பொய்யான இன்மை.

முக்கால முழுமையிலும் முடிவின்மையிலும் வசிப்பீர்கள். பலவாந்தன்மையில் ஒன்ருந்தன்மை காண்பீர்கள்.

பல்கலைக்கழகத்தில் இதையடைய மாட்டீர்கள். ஆனல் யோக வேதாந்த ஆரணியப் பல்கலைக் கழகத்தில் இதையடைவீர்கள்.

மறுக்க வொண்ணுத அடிப்படையான அறங்களை விருத்தி பண்ணுவது ஒவ்வொருவரின் வாழ்க்கைச் சித்திக்கும், மேலும் முக்கியமாக ஒரு சாதகனின் ஆன்மீக வாழ்வின் வெற்றிக்கும் இன்றியமையாதது. நற்குணமே வலிமையுந் திறமையும், அமைதியின் திறவுகோலும். நன்னெறியில் வாழும் ஒரு மனிதன் அனவரதமும் அமைதியாகவும் செழிப்பாகவும் இருக்கிருன். ஒருவர் விருத்திபண்ணவேண்டிய அறங்களின் திட்டமானகுறிப்பை மக்கள் என்னிடம் வினவுகிருர்கள். ஒவ்வொருவரும் பேணி வளர்க்க வேண்டிய அறங்களை ''பதினெண்மைகள்'' எடுத்துரைக்கின்றன. யாதேனும் ஓர் அறத்தை மேற்கொண்டு அதை மிகவும் உயர்ந்த அளவான நிறைவிற்கு விருத்தியாக்குங்கள். அதன் எதிரான தீய குணத்தை,

அதன் மிகப் பல சூக்கும தோற்றத்தைக் கூட முற்ருக வேரோடழியுங்கள். இந்த அறங்களை, அவற்றை விருத்தியாக்கும் வழிகளைப்பற்றிச்சிந்தியுங்கள்.

## பதினெண்மைகளின் விளக்கம்

### 1. களங்கமற்ற தன்மை:

உள் அமைதியுடன் இருங்கள். அந்த உள் அமைதியும் ஆனந்தமும் ஒரு களங்கமற்ற முகத்தின் மூலம் பிரகாசிக்கட்டும்; ஒரு களங்கமற்ற முகம், அமைதியாயும், புன்முறுவலுடையதாயும், கருத்தொன்றியதாயும் இருக்கிறது. மேலும் உக்கிர உள்ளக்கிளர்ச்சியை வெளியிடுவதில்லை. அது அசைவில்லாத தடாகத்தின் மேல் பரப்புப் போலிருக்கிறது.

### 2. ஒழுங்கு முறைமை:

உங்களின் தினசரி வழக்கங்கள், பணி, சாதனை முதலியவற்றில் ஒழுங்கு முறையாய் இருங்கள். தினமும் ஒரு குறிப்பிட்ட நேரத்திற்குப் படுக்கை விட்டெழுங்கள். குறிப்பிட்டநேரத்திற்குப்படுத்துறங்குங்கள். உங்கள் தினசரி முயற்சிகளில் கடிகாரம் போலிருங்கள். தொல்லை, பற்ருர்வம், ஒழுங்கின்மை, ஈனச்செயல் முதலியவற்றிலிருந்து சுவாதீனமாயிருப்பீர்கள். சரியானதைச்சரியான நேரத்திற் செய்வீர்கள்.

### 3. பகட்டின்மை:

உங்கள் பிறப்பு, பதவி, யோக்கியதைகள், ஆன்மீகப் பேறுகள் பற்றித் தற்புகழ்ச்சி கொள்ளாதீர்கள். எல்லாத் தோற்றப்பாடான பொருள்களின் நிலையற்ற இயல்பை நினைவில் வையுங்கள். மற்றவர்களைப் பாராட்டுங்கள். அனைவரிலும் நன்மையைப்

பாருங்கள். மிகக் கீழ் உயிரினங்களையும் உங்கள் சம மானவரைப் போல் நடத்துங்கள்.

4. நேர்மை:

உங்கள் சொற்கள் எண்ணத்துடன் ஒத்திருக்கட்டும். உங்கள் செயல்கள் உங்கள் சொற்களுடன் ஒத்திருக்கட்டும். உங்கள் உள்ளம், உரை.உடலுக்கிடையில் இசைவிணக்கம் இருக்கட்டும்.

5. எளிமை:

கபடமற்றிருங்கள். உங்கள் உரையில் களங்கமற்றிருங்கள். சொற்களையும் குறித்த பொருள்களையும் மாற்றிக் கூறுதீர்கள். வெளிப்பாடாய் இருங்கள். சூழ்ச்சித்திறம், கபடம், தந்திரம் முதலியவற்றைத் தவிருங்கள். உங்கள் உடையில் அலங்காரமின்றியிருங்கள். உங்கள் உணவில் எளிதாயிருங்கள். குழந்தையைப் போன்ற இயல்பை விருத்தியாக்குங்கள்.

6. உண்மை:

வாய்மையானவராய் இருங்கள். உங்கள் வாக்குறுதிகளைக் கடைப்பிடியுங்கள். மிகைபடக் கூறுதீர்கள். உண்மை நிகழ்ச்சிகளைப் புரட்டாதீர்கள். பேசுமுன் இருமுறை சிந்தியுங்கள். உண்மையாய்ப்பேசுங்கள். இனிமையாய்ப்பேசுங்கள். நீங்கள் சொல்வதில் கண்டிப்பாய் இருங்கள்.

7. சம நிலைமை:

அமைதியாய் இருங்கள். நிந்தை, தீங்குசெய்கை, துன்பம், தோல்வி, அவமதிப்பு முதலியவற்றைப் பொறுமையுடன் தாங்குங்கள். புகழ், இன்பம்,

வெற்றி, மதிப்பு முதலியவற்ருல் தற்பெருமை கொள்ளாதீர்கள். இரண்டையும் சமநோக்குடன் நோக்குங்கள். நண்பருடனும் பகைவருடனும் ஒரே மாதிரிநடவுங்கள். ஒன்றும் உங்கள் உள்ளமைதியைக் குழப்ப விடாதீர்கள்.

8. நிலையான தன்மை:

மாறும் இயல்புள்ள மனம் உள்ளவர்களாயிருந்தால் நீங்கள் ஒன்றும் பெற முடியாதென்பதை நினைவு கொள்ளுங்கள். விசாரணை செய்யுங்கள். உங்கள் அடைவு அல்லது இலட்சியத்தைத்தேர்ந்தெடுங்கள். அதை அனவரதமும் நினைவு கூருங்கள். ஒருகாலும் அதைஒரு கண நேரமாயினும் உங்கள் மனதை விட்டு விலக விடாதீர்கள்.

9. முற்கோபமின்மை:

சீற்றத்தின் மூர்க்கமான வெடித்தலின் முன்னேடியே எளிதிற் கோபிக்குந் தன்மை அல்லது முற்கோபம். மனச் சமநிலையின் குழப்பத்தைக் காவல் செய்யுங்கள். அவற்றை அப்பொழுதே அவ்விடத்திலேயே வல்லந்தமாக அடக்குங்கள். மிகுதியாகப் பேரளவான படிவீதம் மேற்கொள்ள விடாதீர்கள். அப்பொழுது அமைதியும் அன்புமாகிய முற்கோபமின்றிய நிலையைப் பெறுவீர்கள்.

10. அமையுந் தன்மை:

நீங்கள் தொடர்பு கொள்ளும் மக்களின் இயல்பை ஓர்ந்தறியுங்கள். அவர்களை அணுகும் உங்கள் முறையை, அவர்கள்பால் கொள்ளும் உங்கள் நடத்தையை மகிழ்ச்சியாயிருக்கும் முறையில் அமையுங்கள். மற்றவர்களின் பொதுப் பண்பு மீறிய நடத்தையைச் சகித்துக் கொள்ளுங்கள். அனைவருக்கும்

தொண்டு புரியுங்கள். அனைவரிடமும் அன்பு கொள்ளுங்கள். எல்லாரின் ஆன்மாவாய் எல்லாரிடமும் இறைவன் இருக்கிறார் என்னும் பாவனை [உள்ளுணர்ச்சி]யுடன் இருங்கள்.

11. தாழ்மை:

ஒவ்வொருவரையும் நன்கு மதியுங்கள். ஒவ்வொருவருக்கும்முன்னால் கூப்பிய அகங்கைகளுடன் தலை வணங்குங்கள். மூத்தோர் நன்மதிப்புக்குரியவர்கள் முன்னிலையில் உரக்க உரையாடாதீர்கள். நீங்கள் உரையாடும் பொழுது கால் விரல்களைப் பாருங்கள். எல்லாரிடத்திலும் இறைவனைக் காணுங்கள். உங்களை அவரின் ஊழியனாய் உணருங்கள். அதனால் அனைவரின் ஊழியனாய் உணருங்கள். ஒருவரையும் உங்களுக்குக் கீழ்த்தரமாய்க் கருதாதீர்கள்.

12. உறுதித் தன்மை:

இது நிலையான தன்மையின் இயற்கை உபகாரி. ஒருமுறை உங்கள் இலக்கைத் தீர்மானித்து உங்கள் நெறியைத் தேர்ந்தெடுத்த பின் அதைவிடாது பற்றுங்கள். தடுமாறாதீர்கள். உறுதியாய் இருங்கள். உங்கள் அடிப்படையான தத்துவங்களில் விட்டுக் கொடுத்து இணங்காதீர்கள். ''நான் என் உயிரைப் பரித்தியாகம் செய்யலாம். ஆனால் நான் திறம்ப மாட்டேன்'' என்னும் அகநோக்குடன் இருங்கள்.

13. முழுமை;

ஒரு முழுமையான ஆட்பண்பை விருத்தியாக்குங்கள். உங்கள் நடத்தையின் தளர்ந்த தொங்கல்களை முடிச்சிடுங்கள். உயர் ஒழுக்கத் தத்துவங்களுடைய ஒரு மனிதனாகுங்கள். தார்மீக வாழ்வு நடத்துங்கள். ஒவ்வொருவனும் உங்களை நம்புவான். உங்

களுக்கு இணங்கி நடப்பான். உங்களை நன்கு மதிப்பான். உங்களை உயர்வாகக் கருதுவான்.

14. பிரபுத் தன்மை:

அற்பத் தனத் தன்மையைச் சாணம் போற்றவிருங்கள். மற்ற மக்களின் குறைபாடுகளை ஒருகாலும் உற்று நோக்காதீர்கள். ஒவ்வொருவரினதும் நற்பண்புகளைப் பாராட்டுங்கள். காம எண்ணங்கள், உரைகள், செயல்களில் ஒருகாலும் இறங்காதீர்கள்.

15. பெருந் தகைமை:

விஷயங்களைப் பற்றி விரிந்த நோக்கைக் கைப்பற்றுங்கள். மற்ற மக்களின் குறைபாடுகளைக் கவனியாதீர்கள். நீங்கள் செய்யும் யாதிலும் பெருந்தகைமை, மேன்மை உடையவர்களாய் இருங்கள். மடைத்தனமான உரையாடலையும் சிறுபிள்ளைத் தனமான பொருத்தமற்ற பேச்சுக்களையும் தவிருங்கள். அற்ப விஷயங்களிலும் சிறுமையான நிகழ்ச்சிகளிலும் மனம் வசியாதிருக்கட்டும்.

16. கொடைத் திறமை:

கொடு, கொடு, கொடு. அன்பு, நல்லெண்ணச் சிந்தனைகளைப் பரப்புங்கள். மற்ற மக்களின் தவறுகளை மன்னியுங்கள். உங்களுக்குத் தீங்கு செய்யும் மனிதனை ஆசீர்வதியுங்கள். உங்களிடம் உள்ளவற்றை மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ளுங்கள். அனைவருக்கும் ஆத்மீக அறிவு புகட்டுங்கள். உங்களிடமுள்ள பொருட் செல்வம், அறிவு, ஆன்மீக ஞானம் முதலியவற்றைக் கடவுள் தன் குழந்தைகளிடம் ஒப்படைத்த தெய்வீக அடைக்கலச் சொத்தாகப் பாவித்துக் கொள்ளுங்கள்.

17. வள்ளன்மை:

நீங்கள் வழங்கும் யாதிலும் வள்ளன்மையுடை

யவராய் இருங்கள். விரிந்த இருதயம் வைத்திருங்கள். கஞ்சத்தன முடையவராய் இராதீர்கள். மற்றவர்கள் இன்புறுவதிலும் அவர்களை இன்பமாக இருக்கச் செய்வதிலும் மகிழ்ச்சி கொள்ளுங்கள். வள்ளன்மை தர்மத்தின் ஒரு சகோதர குணமே. தர்மம், பெருந் தகைமை,பிரபுத் தன்மைகளை நிறைவு செய்தலே வள்ளன்மை.

18. தூய்மை;

இருதயத்தில் தூய்மையாயிருங்கள். காமம், குரோதம், மற்றுந்தீய நாட்டங்களையும் வேரோடழியுங்கள். உங்கள் எண்ணங்களிற்றூய்மையாயிருங்கள். மனதில் தீய எண்ணம் புகாதிருக்கட்டும். எப்பொழுதும் கடவுளைப் பற்றிச் சிந்தியுங்கள். அனைவரினதும் நன்மையைப் பற்றி எண்ணுங்கள். உங்கள் ~~உங்கள்~~ சொற்களில் தூய்மையாயிருங்கள். ஒருகாலும் கொச்சையான, கரடு முரடான, அல்லது அன்பில்லாத சொற்களைக் கூறுதீர்கள். உடலிலும் தூய்மையாயிருங்கள். உங்கள் உடுப்புகளையும் சுற்றுப் புறத்தையும் தூயதாய் வைத்திருங்கள். உடல், உள்ள, ஒழுக்க ஆன்மீக நலவியலின் விதிகளைக் கவனித்துப் பின்பற்றுங்கள்.

இப்புதினெண்மைகளும் கடவுளின் இராச்சியத்திற்குள் நீங்கள் புகுவதற்கு வழிவகுக்கும்.ஆயத்தப் படுத்தும். உங்களுக்கு அழிவின்மையின் வாயிற் கதவுகளைத் திறக்கும். இப்பூமியில் இல்வாழ்விலும் பெருஞ் சித்தி பெறுவீர்கள். இந்தப் பண்புகளை மிகவதிக அளவிற்கு உடமையாகப் பெற்றிருக்கும் ஒரு மனிதன் உண்மையில் திருத்தொண்டரே. அவர் அனைவராலும் நன்று மதிக்கப்படுவர். போற்றிப் பேணப்படுவர். நீங்கள் அனைவரும் ஜீவன் முக்தர்களாகவுட் இந்த அறங்களின் திருவுருவங்களாகவும் ஆகுவீர்களாக!

# மாணவன் கடமை

## -உயர் மகனுவதற்குரிய குறிப்புகள்!-

(சுவாமி சிவானந்தர்)

1. கசடறக் கற்க. அதி விடியற் காலத்தில் உன் பாடங்களைக் கற்க. வைகறையில் 4 மணிக்குத் துயில் விட்டெழுக. நல் நுண்ணறிவும் செம்மை யான ஓர்ந்தறிவும் உனக்குத் தந்தருளும்படி பக வானைப் பிரார்த்திக்குக, பிறகு கற்க. நீ எளிதிற் பாடங்களைக் கிரகித்து நினைவில் வைப்பாய். அதி விடியற் காலையில் ஒரு மணி நேரங் கற்றல் நாளில் அதிகந் தாமதித்து நான்கு மணி நேரங் கற்றலி லும் அதிக பயன் தருகிறது. உன் எல்லாத் தேர் வுகளிலும் மெச்சத் தக்கதாகத் தேறுவாய்.

2. நிரீச்சுர வாத நூல்களைப் பார்க்கவும் வேண் டாம். உலகாயத வாத தத்துவத்தை எடுத்து ரைக்கும் புத்தகங்களைத் தவிர். பயனற்ற இலக் கியம், நாவல்கள், கற்பனைக் கதை முதலியவற் றைத் தவிர். இவை உன் உளத்தையும் நடத் தையையும் கெடுக்கும். அவை உன்னை ஒரு முரட்டு மனிதனுக்கும். பின்பற்றி நடக்க விரும்பும் ஒரு மனிதக் குரங்கே மனம். அதற்கு முன் விழுமிய பொருள்களை வை. தூய்மையும் நன்மையும் பொ ருந்திய மேன்மையான வாழ்வைப் பெறுவாய்.

3. பயன் படுத்தப் பெருத உன் நேரத்திற் கீதை இராமாயணம், மகா பாரதம் முதலியவற்றை வாசி. உபநிடதங்களில் வல்லவனுகு. இவையே உன் விலையுயர்ந்த மரபுரிமை. இவை உன்னை ஓர் உயர் மகனுய் வடிவமைக்கும். இந்த நூல்களி லுள்ள அறிவு உன் முகத்திற்குப் பிரகாசத்தைக் கொடுக்கும் அவை விஞ்ஞானங்களுக்குள் விஞ்ஞா

னத்தை உனக்குக் கற்பிக்கும். அதை யறிவத ஞல் நீ எல்லாவற்றையும் அறிந்தவஞவாய்.

4. ஒரு தனி நிமிடத்தையும் ஒருகாலும் பாழாக் காதே. நேரம் மிகப் பல மதிப்பு மிகுந்தது. நீ இளமையாய் இருக்கிருய். நீ செய்ய வேண்டி யது அதிக அளவு உண்டு. வாழ்வில் மேன்மை யான காரியம் ஏற்றுக் கொண்டாய். பெரும் மேன்மை பெறுவதற்கு நீ பிறந்திருக்கிருய். ஒவ் வொரு கண நேரத்தையும் அனுகூலமாகப் பயன் படுத்து.

5. வீண் பேச்சைத் தவிர். நெறியற்ற பேச்சை நிறுத்து. பழி தூற்று வோரிடமிருந்து தப்பியோடு. தற்பண்பாட்டிலும் நடத்தை அமைப்பதிலும் நீ யாக அக்கறை கொள்.

6. மனவடக்கமும் புலனடக்கமும் உன்னே ஓர் உறுபல ஆற்றல் மிகுதியான படைத் தலைவரிலும் பார்க்க அதியாற்றல் மிகுதியான ஓர் உண்மை யான வீரனுக்கும்.

7. உன் உடலை ஆரோக்கியமுள்ளதாய் வைத்திரு. ஆசனங்களும் பிராணுயாமமும் பயில். சூரிய நமஸ்காரஞ் செய்வதில் ஒழுங்காயிரு. நீ செய்யும் யாவற்றிலும் மட்டாயிரு. வயிற்றை அளவு மீறி நிரப்பாதே. நீ விரும்பும் நேரங்களில் எல்லாம் உண்ணுதே. புகைத்தலை ஒழி. கோப்பி, தேனீர் அல்லது வேறு கிளாச்சி தரும் பொருள்களை மிகை யாய் உட்கொள்ளாதே. தூய நீர் அருந்து. சுத் தக் காற்றில் மூச்சு விடு. ஆரோக்கியந் தரும் ஆகாரம் உட்கொள். விழுமிய கருத்துக்களைக் கருது. உன் உடல், உடை, உறையுள் முதலிய வற்றைத் தூயதாய் வைத்திரு. கடவுளைத்தியானி.

நீ திட ஆரோக்கியமும் மன அமைதியும் துய்த்து மகிழ்வாய்.

8. பிரமசரியமே சக்தியின் பிறப்பிடம். இல்லற மேற்கா நிலையைக் கடைப்பிடி. எண்ணம், சொல், செயலிற் றூய்மையாயிரு. நீ பிரகாசமான கண்கள், அற்புதமான சக்தி, கூர்ந்த நுண்ணறிவு, உறுதியான உடல், வலிமை வாய்ந்த சித்தம் முதலியவற்றைப் பெறுவாய்.

9. நீ கொள்ளும் தோழமையில் எச்சரிக்கையாயிரு. அறிஞரின் சங்கத்தை நாடு; கொடியவரின் சகவாசத்தைத் தவிர். கெட்டவர்கள் உன்னைக் கெடுதியான வழிகளிற் செலுத்தக் கூடும். ஆனால், பின்பு உன் துயரத்திற் பங்கு கொள்ள மாட்டார்கள்.

10. சத்திய சீலனாயிரு. பணிவுள்ளவனாயிரு. நேர்மையானவனாயிரு. அன்புள்ளவனாயிரு. தாராள குணமுள்ளவனாயிரு. துணிவுள்ளவனாயிரு. சகிப்பவனாயிரு. தர்மசிந்தை யுள்ளவனாயிரு. கபடமற்றவனாயிரு. பொறுமையானவனாயிரு. நல்லவனாயிரு. நன்மை செய்.

11. அனைவரையும் சேவி. தன்னலமற்ற சேவை மனநிலையை இப்பொழுதே பெறு. பின் நீ ஒரு யோகியாய் விளங்குவாய். சிறிய சேவைச் செயல்கள், அன்புச் சொல், இரக்கமுள்ள பார்வை, இனிய புன்சிரிப்பு – இவை உன்னை ஓர் உயர் மகனாக்கும்.

12. கடவுளை ஒருகாலும் மறவேல். உன் அடைவை -கடவுளனுபூதியை - ஒருகாலும் மறவாதே. இங்கே

இப்பொழுதே நீ கடவுளைக் காணப்பெற வேண்டும். இங்கே, இப்பொழுதே உன்னை நீ பிறப்புகளிலிருந்து விடுவிக்க வேண்டும். மேலும் உன்னைச் சேர்ந்தவர்களுக்குப் பேரானந்தத்தின் இருப்பிடத்திற்கு வழிகாட்ட வேண்டும். இது உன் புனிதமான கடமை. இதற்காகவே நீ இந்த மனிதப் பிறப்பை எடுத்திருக்கிறாய்.

கடவுள் உனக்கு ஆரோக்கியம், நீண்டாயுள், அமைதி, அபிவிருத்தி எல்லா முயற்சிகளிலும் அனுகூலம், வித்தை, துஷ்டி (மனநிறைவு) புஷ்டி (ஊட்டம்) தெய்வீக ஐஸ்வரியம் முதலியவற்றைத் தந்தருள் புரிவாராக.



# கோவிந்தோப நிடதம்

(ஸ்ரீ சுவாமி சிவானந்தர்.)

~~~~~~

| | |
|---|---|
| சத்தே கடவுள் | கோவிந்தா |
| சித்தே கடவுள் | கோவிந்தா |
| ஆனந்தமே கடவுள் | கோவிந்தா |
| ஞானமே கடவுள் | கோவிந்தா |
| அனந்தமே கடவுள் | கோவிந்தா |
| பிரேமையே கடவுள் | கோவிந்தா |
| அன்பே கடவுள் | கோவிந்தா |
| வாழ்வின் அடைவு | கோவிந்தா |
| தன்னையறிதலே | கோவிந்தா |
| ஜப - கீர்த்தனை மூலம் | கோவிந்தா |
| தியான மூலம் | கோவிந்தா |
| இதைப் பெறு | கோவிந்தா |
| அஹிம்சை சத்தியம் | கோவிந்தா |
| பிரமசரியம் அப்பியசி | கோவிந்தா |
| விவேகம் வைராக்கியம் வளர் | கோவிந்தா |
| சட்சம்பத்தை விருத்தியாக்கு | கோவிந்தா |
| தீவிர நாட்டங்கொள் | கோவிந்தா |
| விசுவாசம் பற்றுறுதியுடன் | கோவிந்தா |
| குருவை யணுகு | கோவிந்தா |
| சிரவணம் மனனம் | கோவிந்தா |
| நிதித்யாசனம் பயில் | கோவிந்தா |
| அதிகாலையில் | கோவிந்தா |
| 4 மணிக்குத் துயிலெழு | கோவிந்தா |
| கிரமமாகத் தியானி | கோவிந்தா |
| தினமும் தற்சோதனை செய் | கோவிந்தா |
| மறைந்திருக்கும் தீமைகளைப்புரிந்து கொள் | கோவிந்தா |
| அற்ப கல்விக்குப்பின் | கோவிந்தா |
| நிறைவடைந்து விட்டாய் என்று | கோவிந்தா |
| ஏமாற்றம் அடையாதே | கோவிந்தா |
~~~~~~

நிறைவு கோவிந்தா
அறமுடிவாகக் கடினம் கோவிந்தா
அறங்களை வளர்ப்பதனுல் கோவிந்தா
குறைபாடுகளை நீக்கு கோவிந்தா
காமக் குரோதம் கோவிந்தா
மத மோகங்களை அடக்கு கோவிந்தா
பழி கூறுதே கோவிந்தா
தீங்கு செய்யாதே கோவிந்தா
துயரப் படாதே கோவிந்தா
மன் முறிவுருதே கோவிந்தா
மனச்சஞ்சலத்திற்கு ஏதில்லை கோவிந்தா
அஞ்சாதே கோவிந்தா
தாமதியாதே கோவிந்தா
புகை பிடியாதே கோவிந்தா
குடிவகை குடியாதே கோவிந்தா
பொய்மை கூறுதே கோவிந்தா
கொச்சைச் சொற்கள் கோவிந்தா
முரட்டுச் சொற்கள் கூறுதே கோவிந்தா
ஏமாற்றுதே கோவிந்தா
ஜீவன்முக்தர்போல் நடியாதே கோவிந்தா
ஜீவன் முக்தி கோவிந்தா
மிகு தொலைவில் உள்ளது கோவிந்தா
இப்பிறப்பில் நீ கோவிந்தா
ஈராறங்களாயினும் விருத்தியாக்கிறுய் கோவிந்தா
அது பெருங்காரியம் கோவிந்தா
பணியே வழிபாடு கோவிந்தா
நிஷ்காம்ய கர்மம் கோவிந்தா
உன்னைப் பந்தியாது கோவிந்தா
உபாசனை மூலம் கோவிந்தா
கடவுளருள் பெறு கோவிந்தா
தொகுப்பு யோகம் பயில் கோவிந்தா
இதுவே தற்கால மனிதனுக்கு யோகம் கோவிந்தா
அது உபநிஷதங்களின் யோகம் கோவிந்தா
சேவை ஈகை கோவிந்தா

பிரணுயாமம் சத்விசார மூலம் கோவிந்தா
தற்றூய்மை பெறு கோவிந்தா
தியானித்து அனுபூதியடை கோவிந்தா
பிரஞ்ஞானம் பிரஹ்ம கோவிந்தா
தத்துவம் அஸி கோவிந்தா
அஹம் பிரஹ்மாஸ்மி கோவிந்தா
அயம் ஆத்மா 'பிரஹ்ம கோவிந்தா
அறிவே பிரம்மம் கோவிந்தா
அதுவே நீ கோவிந்தா
நான் பிரம்மமே கோவிந்தா
இவ்வாத்மா பிரம்மமே கோவிந்தா
இதை உணர்ந்தறிந்து கோவிந்தா
ஜீவன்முக்தராக முனிவராக கோவிந்தா
அச்சந் துயரமின்றி கோவிந்தா
சுயாதீனமாகச் சுற்றித்திரி கோவிந்தா
கடவுள் உன்னே ஆசீர்வதிப்பாராக கோவிந்தா

*0 0 0*

# பக்தியின் பொருள்

(ஆச்சாரிய விநோபாஜி)

ஏழை எளியோருக்கு உதவுதலே கடவுள் வழிபாடு என்பதை நாம் புரிந்துகொள்ள வேண்டும். அடிக்கடி நடப்பதென்ன? நாம் தெரு வழியிலே போகையில் எவரேனும் நோயினுலோ வயிற்றுக்கில்லாமையினுலோ, 'ஐயா! எனக்கு உதவுங்கள்' என்று சொல்லிக் கேட்டால், அதைக் காண, கேட்க சகியாமல் ஒரு பைசா, காலணு எடுத்துப் போட்டுவிட்டுப் போகிறோம். ஆனுல் எதிர்ப்பட்ட அந்த எளியவன், நோயாளி கடவுளே, என்று நாம் நினைக்கிறோமா? நம்மிடம் கைநீட்டி யாசிக்கும், அவர்

கள் கடவுளே, அவர்கள் பசியையும் நோயையும் போக்குதல் கடவுள் வழிபாடே என்று நாம் எண்ணுவது உண்டா? இதே போன்றுதான் நாம் ஒவ்வொருநாளும் பிறருக்குச் செய்யும் உதவியே கடவுள் பூசையென்று நமக்குத் தோன்றுகிறதா?

நாம் கிராமங் கிராமமாய், வீடு வீடாய்ச் சென்று எவர் என்ன கஷ்டப்படுகிறார், ஏழை எளியோர் படுந் துன்பங்களென்ன, யாருக்கு என்ன நோய் என்பதை விசாரித்துப் பார்த்துத் தெரிந்து கொண்டு நம்மாலான உதவி செய்ய வேண்டும். மண்ணால், கல்லால், சிலையமைத்து, கோயில்கள் எழுப்பிக் கடவுளை வழிபட்டு வந்த காலம் போய் விட்டது. ஆனால், நாம் இப்பொழுதும் கோயிலுக்குப் போய்க் கடவுளைத் தரிசித்தால் போதும் என்று வைத்துக் கொண்டு பிறரிடம் நெஞ்சில் ஈரமில்லாமல் நடந்து கொள்கிறோம்; பிறரை ஏமாற்றுகிறோம். அநியாய வட்டி கேட்கிறோம். இதெல்லாம் செய்தல் கடவுளுக்குப் பொறுக்காதென்பதை நாம் அறிவதில்லை. இன்று கடைகளில் விற்கும் எல்லாப் பொருள்களிலும் ஒரே கலப்படம். உணவுப் பண்டங்களும் மருந்துகளும் கூட சுத்தமானவையாகக் கிடைப்பதில்லை. இவ்வாறு ஒருபக்கம் வியாபாரம் செய்து கொண்டு மறுபுறத்தில் சிறிதுதர்மம் செய்துவிடுவதனால் நாம் செய்த பாவத்திற்குப் பரிகாரமாகி விடாது.

————

# சமுதாயத் துப்புரவுக்கு வழி

(மகாகவி பாரதியார்)

வேதபுரத்தில் குள்ளச்சாமி என்றொரு பரதேசி யிருந்தார். அவருக்கு வயது ஐம்பதோ, அறுப தோ, எழுபதோ, எண்பதோ யாருக்கும் தெரி யாது. அவருடைய உயரம் நாலரை அடி இருக் கும். கருநிறம். குண்டுச் சட்டியைப் போல் முகம். உடம்பெல்லாம் வயிரக் கட்டை போலே நல்ல உறுதியான பெயர்வழி.

அவருக்கு வியாதி என்பதே கிடையாது. சென்ற பத்து வருஷங்களில் ஒரே தடவை அவர் மேலே கொஞ்சம் சொறி சிரங்கு வந்தது. பத்து நாளிருந்து நீங்கி விட்டது. அந்த மனுஷ்யன் ஜடபரதருடைய நிலைமையிலேயே இருப்பதாகச் சொல்லலாம். பேசினால் பைத்தியக்காரன் பேசு வது போலிருக்கும். இழுத்திழுத்துத் திக்கித் திக்கி, முன்பின் சம்பந்தமில்லாமல் விழுங்கி விழுங் கிப் பேசுவார். தெருவிலே படுத்துக் கிடப்பார். பசித்தபோது எங்கேனும் பிச்சை வாங்கிச் சாப் பிடுவார். சாமானிய ஜனங்கள் அவருக்கு நூறு வயதுக்கு மேலே ஆகிவிட்டதென்றும், நெடுங்கால மாக இப்போதிருப்பது போலவே இருக்கிறாரென் றும் சொல்லுகிறார்கள். அவர் கையால் விபூதி வாங்கிப் பூசிக்கொண்டால் நோய் தீர்ந்து விடும் என்ற நம்பிக்கையும் பலர் கொண்டிருக்கிறார்கள்.

மேற்படி குள்ளச் சாமியார் ஒருநாள் வீதி யில் நடந்து வரும்போது, முதுகின் மேலே கிழிந்த பழங் கந்தைகளை யெல்லாம் ஒரு பெரிய அழுக்கு மூட்டை கட்டிச் சுமந்து கொண்டு வந்தார். இந்

தச் சாமியாரைக் கண்டால் நான் கும்பிடுவது வழக்கம். அப்படியே கும்பிட்டேன். ஈயென்று பல்லைக் காட்டிப் பேதைச் சிரிப்புச் சிரித்தார். கண்ணைப் பார்த்தால் குறும்பு கூத்தாடுகிறது.

'ஏ சாமி, உனக்கென்ன பயித்தியமா? கந்தைகளைக்கட்டி ஏன்முதுகில்சுமக்கிறாய்' என்றுகேட்டேன்.

''நீ நெஞ்சுக் குள்ளே சுமக்கிறாய். நான் முதுகின் மேலே சுமக்கிறேன்'' என்று சொல்லி ஓடிப் போய் விட்டார். உடனே நான் பொருள் தெரிந்து கொண்டேன். அஞ்ஞானப் பழங் குப்பைகளையும், பழங் கவலைகளையும், பழந் துன்பங்களையும், பழஞ் சிறுமைகளையும் மனதில் வீணாய்ச் சுமந்து திரியும் சாமான்ய மனிதனுடைய அறிவீனத்தை விளக்கும் பொருட்டு சாமியார் இந்த திருஷ்டாந்தத்தைச் சொன்னார் என்று தெரிந்து கொண்டேன்.

பின்னொரு நாள் அவரிடம் பரிகாசமாக நான் ''சாமி, இப்படிப் பிச்சை வாங்கித் தண்டச் சோறு தின்று கொண்டு ஜீவனம் பண்ணுகிறாயே, ஏதேனும் தொழில் செய்து பிழைக்கக் கூடாதா? என்று கேட்டேன்.

அந்தப் பரதேசி சொல்லுகிறார் ''தம்பி நானும் தொழில் செய்துதான் பிழைக்கிறேன். எனக்கு வண்ணான் வேலை. ஐம்புலன்களாகிய கழுதைகளை மேய்க்கிறேன். அந்தக்கரணமான துணி மூட்டைகளை வெளுக்கிறேன்.''

ஆம் பரிசுத்தப் படுத்துகிறவனே ஆசாரியன்; அவனுடைய சொல்லை மற்றவர் ஆசரிக்க [கடைப் பிடிக்க]வேண்டும். மேலே சொன்ன சாமியாருடைய புற நடைகள் குடும்பம் நடத்தும் கிருகஸ்தர்களுக் குத் தகுதியல்ல. ஆனால் அவருடைய உள்ள நடை

யை உலகத்தார் பின்பற்ற வேண்டும். ஐம்புலன்களாகிய கழுதைகளை மீறிச் செல்லாதபடி கட்டுப்படுத்தி ஆள வேண்டும். உள்ளத்தை மாசில்லாதபடி சுத்தமாகச் செய்து கொள்ள வேண்டும்.

அழுக்குத் தீர்க்கும் தொழில் செய்வோர் நமது தேசத்தில் மாகாணத்துக்கு லட்சம்பேர் வேண்டும். ஹிந்துக்கள் தற்காலத்தில் குப்பைக்குள் முழுகிப் போய்க் கிடக்கிறார்கள். வீட்டையும் தெருவையும் சுத்தமாக வைத்துக்கொள்ளவில்லை. ஜலதாரைகளை ஒழுங்குபடுத்தவில்லை. கிணறுகளையும், குளங்களையும், சுனைகளையும் சுத்தமாக வைத்துக் கொள்ளவில்லை. கோயிற் குளங்களில் ஜலம் புழுத்து நெழிகிறது. நாற்றம் குடலைப் பிடுங்கிறது.

மனுஷ்யாபிவிருத்தியாவது யாது?

புழுதியை நீக்கித் தரையைச் சுத்தமாக்குதல். அழுக்குத் துணியையும், நாற்றமில்லாதபடி குளத்தையும், பொதுவாக எல்லாவிஷயங்களையும் சுத்தமாக்கி வைத்துக் கொள்ளுதல்.

நான் மேற்படி சாமியாரிடம் ''சாமியாரே, ஞான நெறியிலே செல்ல விரும்புவோன் முக்கியமாக எதை ஆரம்பத் தொழிலாகக் கொள்ள வேண்டும்?'' என்று கேட்டேன்,

குள்ளச்சாமி சொல்லுகிறார்.

முதலாவது, நாக்கை வெளுக்க வேண்டும். பொய் சொல்லக் கூடாது. புறஞ்சொல்லக்கூடாது. முகஸ்துதி கூடாது, தற்புகழ்ச்சி கூடாது, வருந்தச் சொல்லலாகாது, பயந்து பேசுக்கூடாது, இதுதான் வண்ணான் தொழில் ஆரம்பம். பிறகு அந்தக்

கரணத்தை வெளுத்தல் சுலபம். சில இடங்களில் பொய் சொல்லித் திரும்படியாக இருந்தால் அப்போது மௌனத்தைக் கொள்ள வேண்டும். மௌனம் சர்வார்த்த சாதகம். அதை விட்டுப் பேசும்படி நேர்ந்தால் உண்மையே சொல்ல வேண்டும். உண்மை விரதம் தவறக் கூடாது. தவற வேண்டிய அவசியமில்லை. உண்மை கூறினுல் தீங்கு நேரிடும் என்று நினைப்போர் தெய்வம் உண்டு என்பதை அறிய மாட்டார்கள். தெய்வம் உண்மை. அதன் இஷ்டப்படி உலகம் நடக்கிறது. ஆதலால் பயப்படுகிறவன் மூடசிகாமணி. அந்தக் கரணத்தை வெளுத்தலாவது. அதிலுள்ள பயத்தை நீக்குதல். அந்தக் கரணத்தை சுத்தி செய்து விட்டால் விடுதலை உண்டாகும் என்ருர்.

பின்னுமொரு சமயம் மேற்படி குள்ளச் சாமியார் என்னிடம் வந்து 'தம்பி, இலக்கணக் காரனுச்சுதே! 'வண்ணுன்' என்ற வார்த்தையை உடைத்துப் பொருள் சொல்லுவாயா? என்று கேட்டார்.

நான் திகைத்து, 'சாமி உடைக்கிற இலக்கணம் எனக்குத் தெரியாது' என்றேன்.

அப்போது குள்ளச்சாமி சொல்லுகிருர்: 'வண்x ஆன் - வண்ணுன். ஆன் என்பது ரிஷபம் நந்திகேசுரர். அவருடைய தொழில் சுத்த ஞான மூர்த்தியாகிய சிவனைச் சுமந்து கொண்டிருத்தல். தமிழ் நாட்டு ஞாஞசாரியர்களுக்கு ஆதிமூர்த்தியும் வள்ளலுமாகி நிற்கும் இந்த நந்தி பகவானுடைய தொழிலாகிய ஆசாரியத் தொழிலையே நான் வண்ணுன் தொர்ழில் என்று சொல்லுகிறேன். எனக்கு வண்ணுன் தொழில்' என்று மேற்படி குள்ளச் சாமி சொன்னுர்.



# விவகாரத்துக்குரிய தருமநெறி

விவகாரங்களிலும் தர்மநெறி உண்டு. வியாபாரி கூட தர்மநெறியைக் கடைப்பிடிக்க வேண்டும். அப்போது அவனுக்குப் பாபம் வராது, நல்வாழ்வு பெருகும்.

வியாபாரத்திற் பொய் புகன்ருற்ருன் லாபம் வரும் என்று மக்கள் கூறுகிருர்கள். இது முக்கியமான தவறு. கண்டிப்பாக நேர்மையாயும் உண்மையாயும் உள்ளவர்கள் வியாபரத்தில் முன்னுக்கு வருவார்கள். அவர்கள் தங்கள் விவகாரங்களில் உண்மையா யிருப்பதால் அவர்களை நாடியே மக்கள் செல்வார்கள்.

துணி வியாபாரி கடையில் பொய் முதலில் நுழைந்தது. நீ ஒரு துணிக் கடைக்குள் சென்ருல் வியாபாரி எடுத்த எடுப்பில் ஒரு வகைத் துணி யார் 8 ரூபா என்கிருன். ஒரு மணி அல்லது இரண்டு மணி நேரம் பேரம் பேசிய பின் முடிவில் யார் 1½ ரூபாவுக்குக் கொடுக்கச் சம்மதிக்கிருன். பெரும்பாலான வியாபார நிலையங்களில் இந்த மாதிரி வியாபாரம் நடந்து வருகிறது. பொய்யும் மோசமும் வியாபாரியின் அடிப்படை இயல்புகள். அவனுடைய மனச்சாட்சி பேராசையினுலும் வஞ்சனையினுலும் மழுங்கிப் போயிருக்கிறது. அவனுக்குப் பணமும் பாக்கியமும் இருந்தாலும், இவ்வுலகத்தில் துயரமே. மறு உலகத்திலும் துயரமேதான். ஏனெனில் அவன் நெறியான வாழ்க்கை நடத்தவில்லை. அவனது அறிவு கலக்கமடைந் திருப்பதால் தான் செய்வது என்னவென்பதே அவன் அறியவில்லை.

துர்மார்க்கம் என்ருல் சிற்றின்பச் சீர்கேடும் சட்ட விரோதமான வியபிசாரமும் என்று மட்டும் அர்த்தம் அல்ல. பொய் புகன்று பிறரை ஏமாற்றுபவனும் கூட துன்மார்க்கம் அல்லது தீயொழுக்கம் உள்ளவன்தான். அவனும் துன்மார்க்கனே.

ஒரு தொழிற்சாலை முதலாளி ஒரு போலிச் சரக்கை வியாபாரத்துக்குக் கொண்டு வருகிருன். ஒருவன் கோதுமையில் மணலைக் கலக்கிருன். ஒரு வியாபாரி நெய் மா முதலிய உணவுப் பண்டங்களிற் கலப்படம் செய்கிருன். தச்சன் மட்ட மரத்தில் வேலைசெய்து உயர்ந்த மரத்தின் பெறுமதியைக் கேட்கிருன். ஒரு பொருத்தக்காரன் மூன்ரும் தரமானசெங்கற்களைமுதற்றரச்செங்கற்கள்என்று கூறுகிருன். இவையாவும் மோசத்துக்கு உதாரணங்கள்.

கடைசியிற் பார்த்தால் வியாபாரத்தில் முன்னுக்கு வருதல் என்ருல் என்ன? சிறிது சுவையான உணவு, மோட்டோர் வண்டியில் சவாரி, நகர சபையில் உறுப்பினர், இவை உனக்கு என்றும் நிலைத்த ஆனந்தத்தை அளித்து விடா. இது வாழ்க்கையின் உத்தேசமன்று. மூடன்தான் இதை ஆனந்தம் என்று கொள்வான். என்ன சிறுபிள்ளைத்தனம்! இவை அனைத்தும் அறியாத பிள்ளைகளின் விளையாட்டுக் கருவிகள். அறிவாளிகள் இவற்றைக் கண்டு எள்ளி நகையாடுவார்கள்.

யோக்கியமான முறையில் பிழைப்பைத்தேடுங்கள். வஞ்சனையும் மோசமும் உங்களுக்கு அடுத்த ஜென்மத்தில் புற்று நோய், க்ஷயரோகம். வயிற்றில் புண், புண்புரை, செவிடு, குருடு, ஊமை, இருதயத்திலும் கால்களிலும் எரிச்சல் அவயவக் கோணல் முதலிய தீரா வியாதிகளை உண்டாக்கும். வினையும் பிரதி வினையும் சமமாக

வும் எதிரிடையாயுமிருக்கின்றன. இப் பிறப்பில் நீங்கள் செய்யும் ஒவ்வொரு தீவினைக்கும் மறுபி றப்பில் துன்புற வேண்டி வரும். உங்கள் எண் ணம், பேச்சு, செயல்களில் கவனமாயிருங்கள். நன்மை செய்யுங்கள். காரண காரிய நியதியை உணருங்கள்.

உங்கள் வருமானத்தில் பத்தில் ஒரு பங்கைத் தான தர்மம் செய்யுங்கள். தான தர்மம் பாப மூட்டையைக் குறைக்கின்றது. விதி முறையாகத் தர்மம் செய்யுங்கள். எப்போதாவது உங்களுக் குத் துன்பம் வரும்போது சிறிது செல்வத்தைத் தர்மம் செய்வது பாராட்டத் தக்கதன்று.

நியாயமான மிதமான லாபத்தைக் கொள் ளுங்கள் உங்கள் நடவடிக்கைகளில் உண்மையா கவும் யோக்கியமாகவும் இருங்கள். உங்கள் மனச் சாட்சியை எப்போதும் தூய்மையானதாகவும் புனிதமானதாகவும் வைத்துக்கொள்ளுங்கள். தாரா ளமாகத் தர்மம் செய்யுங்கள். உங்கள் வியாபா ரத்தில் முன்னேற்ற மடைவீர்கள். வியாபாரத் தினுல் பழுதும் பாவமும் அடைய மாட்டீர்கள். லட்சுமி தேவி எப்போதும் உங்களுடன் உறை வாள். நிறைமதி நாளில் (பௌர்ணமி) சத்திய நாராயண கதை நடத்துங்கள். சமூக சமய நிலை யங்களுக்கு உதவி செய்யுங்கள். சமஸ்கிருதப் பாடசாலைகளையும் ஆயுர்வேத மருத்துவ நிலையங் களையும், தர்ம வைத்தியசாலைகளையும், பெண்பா டசாலைகளையும், இலவசத் தொடக்கப் பள்ளிகளை யும் துவக்குங்கள். சங்கீர்த்தன பவனங்களை நிய மியுங்கள். உங்கள் லாபம் தர்ம காரியங்களுக் குப் பயன் படட்டும். உங்களுக்குப் பெரும் புண் ணியம் வரும். இம்மையிலும் மறுமையிலும் உங் களுக்கு இன்பம் உண்டாகும்.

அந்தர்யாமியான இறைவன் உங்கள் எண்ணங்களுக்கும் செயல்களுக்கும் சாட்சியா யிருக்கிறுன் என்பதை நீங்கள் எப்போதும் எண்ணிப் பார்த்தீர்களாளுல், காரண காரிய நியதியை நீங்கள் உண்மையாக உணர்ந்தீர்களாளுல் நீங்கள் தீவினை செய்யத் துணிய மாட்டீர்கள். தீச் செயல்களை நீக்க முயன்ருல் படிப்படியாகக் குறைந்து விடும்.

அத்துவிதம் என்னும் வேதாந்த உண்மையை நீங்கள் நன்கு உணர்ந்தால், நீங்கள் பிறரையே மாற்ற மாட்டீர்கள். மற்றவர்களை மோசம் செய்வதால் உங்களையே மோசம் செய்து கொள்கிறீர்கள். பிறருக்கு உதவுவதால் உங்களுக்கே உதவிக் கொள்கிறீர்கள். எல்லா உயிர்களிலும் ஒரே ஆத்மாதான் இருக்கிறது. அது மட்டுந்தான் உண்மை.



# ஆன்ம அறிவு

''ஆன்ம ஞானம் உடையவர் தலைசிறந்த சர்வ துக்க நிவிர்த்தி நிலையைப் பெறுவதால் அது ராஜ வித்தை ராஜ ரகசியம், ஞானங்களுள் மிகச் சிறந்தது என்று வசிஷ்ட முனி ஸ்ரீ ராமருக்குச் சொல்கிறுர்''

யோக வாசிட்டம்: *2-11-18.*



''ஞானங்களில் ஆன்ம ஞானம் அதி உன்னதமாயிருப்பதாலும் அழிவின்மையை அளிப்பதாலும் [ஒரு மனிதன் விடுதலை பெறுவதற்கு உதவி செய்யும்] எல்லாக்கருமங்களிலும் ஆன்மஞானம் மிகமேன்மையானது.''

மனுஸ்மிருதி; *12—75.*

# முதலிலே கடவுள், அடுத்தபடி உலகம், கடைசியாக நீங்கள்.

(ஸ்ரீ சுவாமி சிவானந்தரின் 76 ஆவது பிறந்த தினச் செய்தி)

கடவுளை முதலிலும், உலகத்தை அடுத்தபடியாகவும், தன்னைக் கடைசியாகவும் வைத்தெண்ணுவதே முறை. மிகச் சாதாரணமானதும் அதே சமயம் மிக முக்கியமானதுமான இக் கொள்கையை மறந்து விடுவதே வாழ்க்கையில் சகல துன்பங்களுக்கும் தீமைகளுக்கும் காரணம். மனிதன் எப்போது இதை மறக்கிறானோ அப்போதே வாழ்வில் எல்லாத் துயரங்களும் சங்கடங்களும் தொடங்கி விடுகின்றன.

மனிதன் இச் சிறந்த போதனையை மறப்பதற்கு அவனது சுயநலந்தான் காரணமாயுள்ளது. தன்னையே முதலிலும், அடுத்தபடியாக உலகத்தையும், கடவுளைக் கடைசியாகவும் வைத்துக் கருத மனிதனைத் தூண்டுவது அவனது சுயநல மனப்பான்மையே. மனிதனை இச் சம்சார சக்கரத்திலே பிணைத்து, கூறவொணாத் துயரங்களையும் துன்பத்தையும் சாவையும் அளிக்கும் அடிப்படைப் பாவம் இச் சுயநலமேயாகும்.

சுயநலத்துக்குக் காரணமாயிருப்பது அறியாமை.

எமது எண்ணங்களுக்கும் உணர்ச்சிகளுக்கும் சாட்சியாய், உள்ளத்திலே உறையும் இறைவனை மறப்பது அறியாமை. இந்த அழியும் உடலோடு தன்னை ஒன்றுபடுத்தி எண்ணுவது அறியாமை. எங்கள் எல்லோருள்ளும் மாறுபாடின்றி விளங்குவது ஒரே ஆன்மா என்ப

ளை மறந்து விடுவது அறியாமை. வேறுபாடு காண்பது அறியாமை. நாம ரூபச் சுழலிலே அகப்பட்டு, அனைத்துக்கும் அடிப்படையாயுள்ள ஆன்மாவை மறப்பது அறியாமை.

அறியாமை என்பது ஒரு சக்தி வாய்ந்த மயக்க மருந்து. காமம், வெறுப்பு, அச்சம் ஆகியவற்றின் பிறப்பிடம் அறியாமையே. அறியாமை உங்களது மெய்ப்பார்வையை மறைத்து, உங்களை ஏமாற்றி, இழிவான நிலைக்கு இறக்கி விடுகிறது.

அறியாமையிலிருந்து சுயநலம் பிறக்கின்றது. சுயநலத்திலிருந்து ஆசை தோன்றுகிறது. ஆசையே சுயநலத்தோடு கூடிய செயல்களுக்குக் காரணமாகிறது. சுயநலத்தோடு கூடிய செயல்கள் மனிதனைப் பிறப்பிறப்பு வட்டத்திலே சுழல வைக்கின்றன.

மனிதனே! உனது உட்பகையான இவ்வறியாமையை அழித்துவிடு. இப் பகைவனது இருப்பிடம் மனம். புறவியல்பை வெல்வதும் வான வெளியை வெற்றி கொள்வதும் உண்மை வெற்றிகளாகா. அகத் தன்மையையும் தகராகாசம் எனப்படும் அக வெளியையும் வெல்வதே உண்மை வெற்றி. எவனொருவன் தனது மனத்தை வெல்கிறானோ அவனே யாவரிலும் சிறந்த வீரன். உலகனைத்தையும் வென்றவனை விடத் தனது மனத்தை வென்றவனே அதிக வலிமை வாய்ந்த வீரனாவான். ஆத்மாநுபூதிக்கும் பேரானந்தத்துக்கும் சாந்திக்கும் மகிழ்ச்சிக்கும் தடையாயிருப்பவை மனத்திலேதான் இருக்கின்றன. எங்கள் கடந்த கால எண்ணங்களின் நேரடியான விளைவே நாம் இப்போது இருக்கும் நிலை. இந்நிலை எங்கள் எண்ணங்களைஅடிப்படையாகக்கொண்டுதோன்றியது. எங்கள்

எண்ணங்களாலே உருவானது. அதே போல, எதிர்காலத்திலே நாம் எப்படி இருக்கப் போகி ரேம் என்பது தற்காலத்தில் நாம் என்ன நினைக் கிறேம் என்பதைப் பொறுத்தது. எனவே சரி யான முறையிலே நினைக்கப் பழகுங்கள். தூய எண்ணம் ஒரு வலிமை வாய்ந்த சக்தியாகும். தூய்மையான எண்ணம் எங்கும் எளிதில் பரவ வல்லது. பரிசுத்த உள்ளங் கொண்ட சாதுக்க ளும் முனிவர்களும் தங்கள் தூய சாத்துவிக எண் ணங்களின் மூலம் மனித சமுதாயத்துக்குச் செய்து வரும் சேவை, பல சமூக சீர்திருத்தக்காரர்கள் செய்யும் சேவையினும் அதிக மதிப்பு வாய்ந்தது.

மனத்துக்கு அடிமையாயிருப்பது அறியாமை. மனத்தைக் கட்டுப் படுத்தி வைத்திருப்பது அறிவு. எனவே மனத்தை வெல்வது உங்களுக்குச் சாந்தி யளிக்குமேயன்றி வேறு எதுவும் சாந்தியளிக்க முடியாது.

அறிவென்னும் வாள் கொண்டு மனத்துடன் போரிடுங்கள். விவேகத்தையும் வைராக்கியத்தை யும் வளர்த்துக் கொள்ளுங்கள். புலன்களைப் போகப் பொருள்களிலிருந்து திருப்புங்கள். மனத் தைப் புலன்களிலிருந்து மீட்டுக் கொள்ளுங்கள். துணிவுடன் அகப் போரில் ஈடுபடுங்கள். தன்ன டக்கத்தின் மூலமும் நற்பண்புகளை வளர்ப்பதன் மூலமும் மனத்தை வெல்லுங்கள். தெய்வீக வாழ்க்கை வாழுங்கள்.

மனமானது காமம், வெறுப்பு, கோபம், பொ றுமை என்னும் நால்வகைத் தீக்களின் உறைவிட மாகும். இத் தீக்கள் உங்கள் ஆன்மாவை அழிப் பதற்கு முன்னர் தூய்மை, அன்பு பெருந்தன்மை

ஆகியவற்றின் துணையுடன் அத்திக்களை அணைத்து விடுங்கள்.

உங்களுள்ளே இருக்கும் தெய்வீகத் தன்மையை உணர்ந்து கொள்ளுங்கள். அனைவரிடத்துமுள்ள தெய்வீகத் தன்மையை உணருங்கள். இவ்வுலகெங்கணும் இறைவன் வியாபித்துள்ளான். இங்கு தீயது எதுவுமில்லை. பழித்துக் கூற எதுவுமில்லை. இவ்வுலகம் ஒரு மாபெரும் கல்விக்கூடம். ஒவ்வொரு அனுபவத்திலிருந்தும் உங்கள் பாடங்களை நன்கு கற்றுக் கொள்ளுங்கள். இவ்வுலகிலுள்ள ஒவ்வொன்றும் எதையோ போதித்துக் கொண்டிருக்கிறது. கண்ணுள்ளவன் அதைக் காண்கிறான். காதுள்ளவன் அதைக் கேட்கிறான்.

மீண்டும் ஒருமுறை உங்களுக்குக் கூறுகிறேன். முதலிலே கடவுள், அதற்குப் பிறகு உலகம், கடைசியாக நீங்கள். இவ்வுன்னதமான போதனையைப் பின்பற்றுங்கள். சாந்தி அப்போது உங்களுடையதாகும். மகிழ்ச்சி அப்போது உங்களுடையதாகும். ஆனந்தம் அப்போது உங்களுடையதாகும்.

அழிவற்ற ஆனந்தமும் நிலையான சாந்தியும் ஆன்மீக ஒளியும் இறைவன் உங்களுக்கு அருள்வாராக.

‘இவ்வெளியீட்டிற்குப் பொருளுதவியளித்த அன்பர்கள் அனைவருக்கும் வெளியிடுவோரின் நன்றியும் ஆண்டவன் ஆசியும் குருவருளும் உரித்தாகுக’

# மரியாதை

(ஸ்ரீ சுவாமி இராஜேஸ்வரானந்தர்)

மரியாதை என்பது உலகில் ஒரு நன்னடத்தைக் கோட்பாடு. அது கருணையாக வெளிப்படுத்திய உண்மையான கருணையே.

மரியாதை தனியாளில் ஒழுங்காகவும் உறுதியாகவும் வளர வேண்டும். சிறுவர் சிறு வயது தொடக்கமே அதை விருத்தியாக்க வேண்டும்.

மரியாதை வீட்டிற் றொடங்கி அப்பாலும் அகலமாகவும் பரவ வேண்டும். அது மற்றவர்களிடம் மதிப்பு, கருணை, அன்பிலிருந்து முளைத்தெழ வேண்டும்.

மரியாதை என்பது நிறை தளர்வும் தன்னுரிமையுமே. அது ஒரு காற்றுத் திண்டு எம் குலுங்குதலை வியப்பாகத் தளர்த்துவது போன்றது.

மரியாதை - வினயம், நல்லொழுக்கவுணர்வு, நல்வளர்ப்பு, நல்லியல்பு, பிறர்நலப் பற்று முதலியவற்றை வேண்டுகிறது.

மரியாதை விலை கொள்ளப்படுவதுமில்லை. விலையாகப்படுவதுமில்லை. முடிவில் அது ஒன்றும் விலை பிடியாவதில்லை. அது ஒருவரின் உயிரில் சிறிது சிறிதாகப் புகட்டப்பட வேண்டும். அது தன்னடக்கத்தால் நேர்மையாகப் பயிலப்பட வேண்டும்.

மரியாதை உள்ளிருந்து, உள்ளத்திருந்து வருகிறது நடத்தை என்பது ஒவ்வொருவரும் தம் பிரதி விம்பத்தைக் காட்டும் கண்ணாடியே.

மரியாதை ஒரு நாகரிகமான, மறைத்துவைத்த முகமன் இனம் அன்று. அது மற்றவர்களின் உணர்ச்சி மிக்க தன்மையைத் தாக்கும் வகையில் உன் கருத்துகளை வெளிப்படுத்துதற்கு அனுமதி கொடாது. அது உன்னைச் சாவதான மற்றதாக்கும் சக்தியை அடக்கி நன்னடத்தை நழுவுதலிலிருந்து உன்னைத் தடுத்தாட் கொள்ள வேண்டும்.

மரியாதை புத்தகப் படிப்பன்று. ஆனால் அது நல்லொழுக்க உணர்வினதும் இயல்பினதும் விளைவே. மரியாதையான, பெருந்தன்மையான முறையில விஷயங்களைச் சொல்லவும் செய்யவும் கற்றுக் கொள்ளவும்.

'தனித்திருக்கும்பொழுது உன் சிந்தனையைக் கவனி; உன் குடும்பத்தில் உன் மன நிலையைக் கவனி; மேலும் சமூகத்தில் உன் மொழியைக் கவனி' என்று ஒரு முதுமொழி கூறு நிற்கும்.

மரியாதை மனச் சுருக்குகளைச் சமப்படுத்துகிறது. மேலும் பேச்சு எண்ணத்திற்கு யாதோ, நறுமணம் மலர்களுக்கு யாதோ அதே மரியாதை நலப்பாட்டிற்கு.



# ஆன்மீக விழிப்பூட்டி

**— திவ்விய அறுவடை —**

அருட்பெற்ற அழிவின்றிய ஆத்மனே!

ஓம் நமோ நாராயணுய.
வணக்கமும் வாழ்த்தும்.

விவேகமே விதை,
வைராக்கியமே மழை,
அமைதியே கலப்பை,
தன்னடக்கமே கடிவாளம்,
துறவே கைப்பிடி,
மனக்குவிப்பே எருது,
உழவு என்பது காமக்
குரோத, விரோத, மாற்சரியங் களைதலே
விளைவாகும் அறுவடை என்பது,
அழிவின்மையையும் நித்தியானந்தத்தையுந்
தரும்,
நிர்விகற்ப சமாதியும் தன்னிறைவுப் பேறுமே.

**இறைவன் உன்னை ஆசிர்வதிப்பாராக.**

உன் சொந்த ஆத்மன்
சுவாமி சிவானந்தா.



# வீட்டிலேயே கடவுளனுபூதி

-சுவாமி சிவானந்தா-

அழிவற்ற ஆத்மனே! வணக்கங்கள்.

அனுபூதி குகைவாசிகளினதும் மலையேறும் நாடோடிகளினதும் தனி உரிமை அன்று. வெளி நிலைமைகள் ஒரோரு காலம் உதவியளிக்கலாம்; ஆனால் அகநோக்கே முக்கியமான விஷயம் - மேலும் புறச் சூழ்நிலைகளும் இந்த நோக்கினாலேயே வகுக்கப் படுகின்றன. நீயே உன் சொந்த மனக்கவலைகளும் கலகங்களுமாகிய உலகைப் படைக்கிறாய். ஒருவரும் அதை உன் மேற்றிணிக்கவில்லை.

கர்த்திருத்துவக் கருத்தின்றி உன் குடும்பக் கடமைகளை நிறைவேற்று. இறைவனின் இச்சை உன் மூலம் தொழிற்படுகிறது என்றும் அவருக்கே, அவருக்கு மாத்திரமே உன் குடும்ப உறுப்பினர் வழியே தொண்டு செய்கிறாய் என்றும் உணர். உன் குடும்பத்திற் பகையான அங்கத்தவனும் அவரே; அறிவற்ற மகனும் அவரே; தவறாய் நடந்துகொண்ட உடன் பிறந்தார் மகனும் அவரே; அவர் உனக்குப் பயிற்சியளிப்பதற்காகப் பற்பல உடுப்புக்களை உடுக்கிறார். அவரிடத்தில் ஆதரவாயிரு. முகமலர்ச்சி காட்டு, புன்முறுவல் கொள்! அனைவரிலும் அவரின் இருப்பை அறி! ஆனந்த ஆடலாடு.

பிரேமையுடன் ஓம்

உன் சொந்த ஆத்மா.



# சிவானந்தரின் பொன் மொழிகள்

1. நல்லதைக் காண்க; நல்லதைக் கேட்க; நல்லதைப் பேசுக; நல்லதே செய்க.
2. அன்பெங்கிருக்கும் அங்கு தொண்டிருக்கும்.
3. சிறு சிறு நற்செயல் சேரின் பெருஞ் செயல்.
4. பொன்னினும் பெருமதிப்புடையது பொழுது
5. விநயம் விதைப்போற்கு நட்பு அறுவடையாம்
6. பரிவு நாற்றிடுவோன் அன்புப் பயிர் சேகரிப்பான்.
7. நண்பர் எண்ணிக்கையைப் பெருக்க நாடாதே.
8. கடன் பெறத் தலைப்படின் கழிந்திடும் நட்பு.
9. இனிய பண்புடைமையை ஏற்றமார் சிபாரிசாம்.
10. கீழ்ப்படிபவர்க்குப் பிறர் கீழ்ப்படிவர்.
11. வணக்கம் காட்டலினும் வலிது கீழ்ப்படிதல்.
12. தியாகந் தன்னிலும் சிறந்தது கீழ்ப்படிதல்.
13. அன்பே மாபெரும் ஆற்றல் இவ்வுலகில்.
14. உலகில் ஞயம்பட உலவுக; ஒத்துவாழ்க.
15. சிறு பிள்ளைத் தரத்தரொடு சேரற்க.
16. துருவியாராய்ந்த பின் தொடங்குக நட்பு.
17. உயர்வு நவிர்ச்சி, பொய் சோடிப்பு, உண்மை திரித்தலிவை ஒழிக்க நின் பேச்சில்.
18. விலக்குக வேண்டாத விவாதங்கள் எல்லாம்.
19. மகான்கள் திருமுன்புவார்த்தைமிகப்பேசேல்.
20. பிறர்க்கும் பகிர்ந்தளி, பிறங்கு நின் வளங்களை.

21. மென்மொழி வெற்றி அளிக்கா தொழியினும் வன்மனந் தன்னை இளக வைக்கும்.

22. நியாயத்தின் நண்பன் நிலைத்த விசுவாசம்.

23. விநயம் ஈகைக்கு வேண்டிய சகோதரி.

24. கடன் வாங்குதலால் கவலை வளரும்.

25. கொடுமை பிறிதுயிர்க் கிழைப்பவன் அது தான் கடவுட் கிழைத்த கொடுமையாகும்.

26. நாட்டின் சிறப்பதன் நாரியர் கைவசத்தாம்.

27. கானல்நீர்போல்வதேகாணும்செல்வமெலாம்.

28. புனித அன்பே பொய்யில்லாச் சேவை.

29. மானிட அன்பிற்கு மன்னும் உள்ளீடிலை.

30. உனதயல் வீட்டான் உனதான்மாவே.

31. செல்வம் என்பது மறைக்குந் திரையாம்.

32. தான தர்மங்கள் சேர்க்கும் தனமாம்.

33. உலகின்ப நாட்டத்தோர் வாழ்முறை ஊனம் வீண்.

34. உன்பால்உள்ளத்தில்உயர்ந்ததைப்பிறர்க்களி.



# எப்படி வைராக்கியம் பெறுவது?

(இவ் ஏழு முக்கிய குறிப்புகளை நினைவு கூர்க)

'ஓம் சற்குரு பரப்பிரம்மனே நமஹ'

1. ஹரி ஓம். சிற்றின்பம் கண பங்கமானது, மருட்சி தருவது, மாயமானது, கற்பனையில் மட்டும் உள்ளது.

2. கடுகளவின்பம் மலையளவு துன்பத்துடன் கலந்திருக்கிறது.

3. துய்த்துநுகர்வது ஓர் ஆசையைப்பரிபூர்த்தி பண்ண மாட்டாது. அதற்கு மாருக அது கடும் வாஞ்சை (திருஷ்ணைகளும் வாசனைகளும்) மூலம் துய்த்து நுகர்வதன் பிரகாரம் மனதை அமைதியற்றதாக்குகிறது.

4. சிற்றின்பம் பிரம்மஞானத்தின் ஒருசத்துரு

5. சிற்றின்பமே பிறப்பிறப்பின் காரணம்.

6. இவ்வுடல் சதை எலும்பு, எல்லாவிதமான அழுக்குகளின் பிண்டமேஅன்றி ஒன்றுமில்லை.

7. தன்னிறைவுப் பேறு அல்லது சாகாமை, நித்திய இன்பம், தலைசிறந்த அமைதி, அனந்த அறிவுமாகிய ஆன்மா அல்லது பிரம்மம் அல்லது நித்தியத்தில் வாழ்தலின் விளைவை மனதிற்குமுன் வைக்குக. இவ்வேழு குறிப்புகளையும் நினைவு கூர்ந்தால் மனம் சிற்றின்ப வாஞ்சைகளிலிருந்து விடுதலை பெறும். வைராக்கியம், விவேகம், முமுக்ஷுத்துவம் (சித்த விகாரமின்மை, நித்தியாநித்திய வஸ்து விவேகம், பிறப்பிறப்பிலிருந்து விடுதலை பெறுவதற்கு தீவிரசித்தமுள்ளவிருப்பம்) தோன்றும். சிற்றின்பவாழ்வின்குறைபாடுகளை (தோஷதிருஷ்டியை) யும்உலகவாழ்வின் உண்மையற்ற வியல்பையும் (மித்யா திருஷ்டியை) யும் உற்றுக் கவனிக்குக.

இதைச் சட்டமிட்டு வீட்டில் ஒரு தலைமையான இடத்தில் வைக்குக. துயில் எழுந்ததும் இதைத் தினமும் ஒருமுறை வாசிக்குக.

ஹரி ஓம் தத் ஸத் ஓம் சாந்தி! சாந்தி! சாந்தி!

— சிவானந்தர்.

# மனச் சஞ்சலத்தின் எட்டுப் பிறப்பிடங்கள்.

(சுவாமி ராமதீர்த்தர்)

மனதில் ஒருவரை வேறொருவருடன் ஒற்றுமை காணுதல் அல்லது ஒப்பிட்டு வேறுபாடுகளைக் காணுதல்.

தன்னை வேறு யாருடனும் மானசிகமாய் ஒப்பிடுதல்.

நிகழ் கால நிகழ்ச்சிகளைச் சென்ற கால நிகழ்ச்சிகளுடன் ஒப்பிட்டுக் கடந்த குற்றங்களை ஆழ்ந்து சிந்தித்தல்.

எதிர்கால திட்டங்களிற் கூர்ந்த கவனம் செலுத்தி யேதேனும் ஒன்றுக்கு அஞ்சுதல்.

எம் மனதை ஒன்றான தலை சிறந்த மெய்ப் பொருளிற்றவிர யேதேனும் ஒன்றில் நிறுத்துதல்.



வெளித் தோற்றங்களிற் சார்ந்திருந்து எல்லாவற்றையும் ஆளும் உள்ளுக்குள்ளான இணக்கத்தில் நடைமுறையில் நம்பிக்கை கொள்ளாதிருத்தல்.

மக்களின் சொற்கள் அல்லது வெளித் தோற்றமான நடத்தையிலிருந்து முடிவுகளுக்குக் குதித்து, சமயவொழுக்கத்திற்குரிய ஒழுங்கு முறையில் நம்பிக்கையுடன் முழு நிறைவாய்த் திருப்திப்பட்டு ஓய்ந்திருத்தல்.

மக்களுடன் உரையாடலில் மட்டு மீறித் தொலைவாய் வழி தவறிச் செல்லல்.

இதுதான் மக்களின் மனதிற் குழப்பத்தைப் பிறப்பிக்கின்றது. ஆகையால், மனத்தொல்லையின் இந்த எட்டுப் பிறப்பிடங்களையும் தவிருங்கள். ஓம்!

பிரசுரிப்போர்:- திவ்ய ஜீவன சங்கம் - திருக்கோணமலை, சாம்பல் தீவு, பருத்தித்துறைக் கிளைகள்.
அச்சிடுவோர்:- நாவலப்பிட்டி, ஆத்மஜோதி அச்சகத்தார்.